# இருமைகள்

**பிறப்பு - இறப்பு**

**நன்மை - தீமை**

**புண்ணியம் - பாவம்**

**பகல் - இரவு**

**ஒளி - இருள்**

**நேர்மறை (+ve) - எதிர்மறை (-ve)**

**யின் - யாங்**

**வெப்பம் - குளிர்ச்சி**

**விருப்பு - வெறுப்பு**

**உண்டு - இல்லை**

**அறிவு - அறியாமை**

**பணிவு - திமிர்**

**உண்மை - பொய்**

**சரி - தவறு**

**நினைவு - மறதி**

**பழமை - புதுமை**

**மகிழ்ச்சி - துக்கம்**

**இலாபம் - நஷ்டம்**

**வேண்டும் - வேண்டாம்**

**ஆக்கம் - அழிவு**

இவ்வாறு, ஏராளமான இருமைகளான எதிர் வினைகளை எடுத்துக் கூறிக்கொண்டே போகலாம்.

இதிலே, ஒன்று இருக்க, அதற்கு வேறாக மற்றொன்று எங்கிருந்து அதற்கு எதிராக வந்தது...?

இந்த முரண்பாடுகள் ஏன்...? என்றாவது இதைப்பற்றி யோசித்துப் பார்த்திருக்கின்றோமா...?

இப்பொழுது யோசியுங்கள்...!

ஆம்! இந்த இருமைகளை அறிந்தால்தான் **இறைவ(தன்)னை** அறிய முடியும்.

இருமைகளுக்கும், இறைவனுக்கும் என்ன சம்பந்தம்...?

இறைவனுக்கும் - தனக்கும் என்ன சம்பந்தம்...?

அதாவது, **அறிவு** என்ற ஒன்று இருந்தால் அங்கு **மனம்** என்ற ஒன்று உண்டாகி விடுகின்றது.

அவ்வாறே, **சிவம்** என்று ஒன்று இருந்தால் அங்கே **சக்தி** என்ற ஒன்று உண்டாகி விடுகின்றது.

அதுப்போன்றே, **பிரம்மம்** என்ற ஒன்று இருந்தால் **மாயை** என்ற ஒன்றும் உண்டாகி விடுகின்றது.

ஆக, இவைகளை ஒன்றிலிருந்து ஒன்றைப் பிரிக்க முடியாது. இந்த இரண்டும் சேர்ந்தால்தான் இந்த உலகம் இயங்கும். இருக்கும்.

இதிலே, '**அறிவு**' என்ற ஒன்று இருப்பதினால் தான் "**மனம்**" என்ற மற்றொன்றும் உண்டாகி விடுகின்றது.

சரி!

இதிலே நமக்கு ஒன்று மட்டுமே போதும் அல்லவா...?

அதுவும், **அறிவு நன்மை, ஒளி, புண்ணியம், இலாபம்** என்ற முதலில் உள்ளவைகள் மட்டுமே போதுமே, ஆனால், அதற்கு எதிராக உள்ளதும் தானாகவே வருகின்றதே...?

அதை எப்படி ஏற்றுக் கொள்வது? என்ற எண்ணம் எழுகின்றது.

இதிலே அனைவரும் அறிந்துக் கொள்ள வேண்டிய அரிய உண்மை என்னவெனில், இந்த இருமைகளை ஏற்படுத்துவது எது? என்று அறியும்வரை அந்த இருமைகளை கடந்து ஒருமை நிலைக்கு நம்மால் வர முடியாது.

அதனால்தான் ஒன்றேயாகிய ஆன்மாவை அனைவராலும் அனுபவமாக உணர முடியாமல் போகின்றது. அத்துடன், ஆன்மாவைப் பற்றிய அறிவும், வெறும் ஏட்டுச்சுரைக்காய் போன்று, மனதளவிலே நின்று விடுகின்றது.

என்ன செய்யலாம்...?

இந்த இருமைகளை இல்லாமல் செய்ய முடியுமா...?

அது சாத்தியமாகுமா...!

**இருமை வகைதெரிந்து ஈண்டு அறம் பூண்டார் பெருமை பிறங்கிற்று உலகு.**

பிறப்பு - இறப்பு என்பன போன்ற இரண்டிரண்டாக உள்ள இருமைகளின் கூறு பாடுகளை ஆராய்ந்தறிந்து அதிலே, அறத்தை மேற்கொண்டவரின் பெருமையே உலகத்தில் உயர்ந்தது என்கின்றார் வள்ளுவப்பெருந்தகை.

சரி! இதிலே, அறம் என்பது என்ன..?

அதற்கும் அவரே விடை பகிர்கின்றார்.

**மனத்துக்கண் மாசிலன் ஆதல் அனைத்து அறன்
ஆகுல நீர பிற.**

அதாவது, மனதில் தூய்மையாக, குற்றம் இல்லாதவனாக இருக்க வேண்டும். அதுவே அறமாகும்.

மீண்டும் விசயத்திற்கு வருவோம்...

அதாவது, மனதில் மாசு இன்றி இருப்பது அல்லது தூய்மையாக இருப்பது என்றால் எப்படி இருக்க வேண்டும்...?

மனதிலே, இருமைகள் இல்லாமலிருப்பதே மாசற்ற நிலை அல்லது **தூய்மையான நிலை** என்பதினால், இந்த இருமைகளைக் கடந்து செல்கின்ற மனமே **மாசற்ற மனம்** எனப்படுகின்றது.

இந்த இருமைகளற்ற மனதை அடைந்தவனுக்கு மட்டுமே அந்த "**அறிவு**" (ஆன்மா) அனுபவமாக பிரகாசிக்கும்.

சரி! இருமைகளைக் கடந்து தூய்மையான மனதிலே அறிவை அறிவது எனில், இதிலே இருமைகளைக் கடப்பது என்பது எவ்வாறு...?

நன்மையை விரும்பும் நாம் தீமைகளை ஏற்றுக் கொள்வதா...?

சந்தோசத்தை அடைய ஆசைப்படும் நாம் துக்கத்தை ஏற்றுக் கொள்வதா...?

இலாபத்தை அடைய ஆசைப்படும் நாம் நஷ்டத்தை ஏற்பதா...?

அவ்வாறே, பிரம்மத்தை மட்டுமே ஏற்கும் நமக்கு மாயையையும் சேர்த்துக் கொள்வதா...?

இது சாத்தியமாகுமா...?

இங்கேதான் நாம் விழித்துக்கொள்ள வேண்டும்.

அதாவது, இதில் ஒன்றை அடைய ஆசைப்படும் நமக்கு அடுத்ததாக உள்ள ஒன்றை வேண்டாம் என்று கூறினாலும், அது தானாகவே வலிய வந்து நம்மை அடைகின்றது அல்லவா...?

அது, ஒவ்வொருவருக்கும் அனுபவ உண்மை அல்லவா...?

ஏன் அவ்வாறு வருகின்றது...?

அது வேண்டாம் என்றாலும் வலிய வருகின்றதே... ஏன்?

இங்குதான் ஒரு உண்மையை புரிந்துக் கொள்ள வேண்டும்.

இவைகளை ஒன்றிலிருந்து ஒன்றை பிரிக்க முடியாது என்பதை அறிந்துக் கொள்ள வேண்டும்.

ஏன் எனில், **இருப்பது ஒன்றே!**

இதுப்புரியாமல், இருமைகளாகப் பிரித்து வைத்துக் கொள்வதெல்லாம் மனதின் மடமை என்றே அறியப்பட வேண்டும்.

அதனால், அந்த இரண்டையும் ஏற்றுக் கொள்கின்ற பக்குவமான, தூய்மையான மனதை அடைந்தவனுக்கு மட்டுமே **இருமைகள்** என்பது இருக்காது. இருப்பது ஒன்றே! என்பது புரியவரும்.

அவனுக்கு மட்டுமே பிரிவினை இருக்காது.

**இருப்பதெல்லாம் இறைவ(நா)னே!** என்பது புரியவரும்.

ஒரு மின்கலம் இயங்க அதிலே **+Ve** மற்றும் **-Ve** என்ற இரண்டும் இருந்தாக வேண்டும். வெறும் +Ve

மட்டுமே போதும் என்றால், அந்த மின்கலன் நமக்கு உபயோகப்படாது.

அதுப்போலத்தான் **பிரம்மம்** என்று ஒன்று இருந்தால், அங்கே **மாயை** என்ற ஒன்றும் இருக்கும் என்பதை அறிந்து, அதை அப்படியே ஏற்றுக்கொண்டு, அதிலே மதி மயங்காமல் இருப்பவனே அறிவாளி (ஞானி) ஆகின்றான்.

அவ்வாறே, **அறிவு** என்ற ஒன்று இருந்தால், அங்கே **மனம்** என்ற ஒன்றும் இருக்கும் என்று ஏற்பவனே அங்கு அனைத்தையும் அறிந்தவன் ஆகின்றான்.

**இலாபம்** என்று ஒன்று இருந்தால், அதிலே **நஷ்டம்** என்ற ஒன்றும் வரும் என்று ஏற்பவனே நல்ல வியாபாரி ஆகின்றான்.

ஆனால், இதிலே ஒன்று மட்டுமே வேண்டும் என்று நினைப்பவன் மட்டுமே எதிலேயும் வெற்றி பெற முடியாது, தோல்வியை ஏற்கின்ற மனமில்லாமல் துவண்டு போகின்றான்.

எனவே, எல்லா இருமைகளிலும் ஒருமையைப் பார்ப்பவன் எவனோ, அவனே, அந்த ஏக அறிவை அறிந்தவன் ஆகின்றான்.

அவன் மட்டுமே எதிலும், எதனாலும் பாதிப்படையாத பழுத்த பக்குவமுடைய **பரமன்** ஆகின்றான்.

இதுப்புரியாமல் இருப்பவன் எவனோ, அவன் **பாமரனாகவே** இருக்கின்றான்.

@@@@@@ **நிறைவு** @@@@@@

